# ॥ त्रिपुरसुन्दरीमानसपूजास्तोत्रम् ॥

# த்ரிபுரஸுந்தரீ மானஸபூஜா ஸ்தோத்ரம்

(1)

मम न भजनशक्तिः पादयोस्ते न भक्ति -
र्न च विषयविरक्तिर्ध्यानयोगे न सक्तिः ।
इति मनसि सदाहं चिन्तयन्नाद्यशक्ते
रुचिरवचनपुष्पैरर्चनं सञ्चिनोमि ॥

மம ந பஜந சக்தி: பாத யோஸ்தே ந பக்தி:
ந ச விஷயவிரக்தி: த்யாநயோகே நஸக்தி:
இதிமநஸி ஸதாஹம் சிந்தயன் ஆத்யசக்தே
ருசிர வசனபுஷ்பை ரர்சனம் ஸஞ்சிநோமி॥

ஹே ஆதிசக்தியே! உனது திருவடிகளை சேவிக்கப் போதுமான சக்தியுமில்லை; பக்தியுமில்லை, அல்லது உலக விஷயங்களிலிருந்து விரக்தியுமில்லை, தியானம், யோகம் இவற்றில் பற்றுமில்லை. என்றிவ்வாறு எண்ணுவதுடன் இந்த அழகிய வார்த்தைகளாகிய புஷ்பங்களால் அர்ச்சனையை செய்ய முற்படுகிறேன்.

(2)

व्याप्तं हाटकविग्रहैर्जलचरैरारूढदेवव्रजैः
पोतैराकुलितान्तरं मणिधरैर्भूमीधरैर्भूषितम् ।
आरक्तामृतसिन्धुमुद्धुरचलद्वीचीचयव्याकुल -
व्योमानं परिचिन्त्य सन्ततमहो चेतः कृतार्थीभव ॥

வ்யாப்தம் ஹாடகவிக்ரஹைர்ஜலசரைராரூட
தேவவ்ரஜை:
போதை ராகுலிதாந்தரம் மணிதரைர்பூமீதரைர்
பூஷிதம்।
ஆரக்தாம்ருதஸிந்து முத்தர சலத்வீசீசய வ்யாகுல
வ்யோமானம் பரிசிந்த்ய ஸந்ததமஹோ சேத:
க்ருதார்த்தீபவ॥

ஏமனமே! தங்க விக்ரஹங்களாகிய ஜலஜந்துக்கள் விழுமியிருப்பதும், வாஹனத்தில் ஏறிய தேவர்கூட்டமாகிய படகுகளால் கலக்கமுற்ற உட்பகுதியையுடையதும், மணி ஹாரங்கள் மிளிரும் தேவர்களாகிய மலைகள் சூழ்ந்ததும், கட்டுக் கடங்காமல் கிளம்பிய அலைகள் ஆர்பரிக்கும் மேற்புறத்தை யுடையதுமாகிய சிவந்த அம்ருதக் கடலை எண்ணி எண்ணி பெருமைப்படுவாயே!

(3)

तस्मिन्नुज्ज्वलरत्नजालविलसत्कान्तिच्छटाभिः स्फुटं
कुर्वाणं वियदिन्द्रचापनिचयैराच्छादितं सर्वतः ।
उच्चैः श्रृङ्गनिषण्णदिव्यवनितावृन्दाननप्रोल्लस –
द्गीताकर्णननिश्चलाखिलमृगं द्वीपं नमस्कुर्महे ॥

தஸ்மின் உஜ்வ லரத்னஜால விலஸத் காந்திச்
சடாபிஸ்புடம்
குர்வாணம் வியதிந்த்ரசாப நிசயை ராச்சாதிதம்
ஸர்வத:।
உச்சை: ச்ருங்கநிஷண்ண திவ்யவநிதா ப்ருந்தா
நநப்ரோல்லஸத்
கீதா கர்ணந நிஸ்சலாகில ம்ருகம் த்வீபம்
நமஸ்குர்ம ஹே॥

அங்கு பளபளப்பான ரத்ன மணிகளின் காந்தியால் விளங்குவதும், அதனால் ஆகாயத்தை இந்திரவில் மறைத் திருப்பதுபோல செய்வதும், உச்சியின்மேல் உட்கார்ந்து தேவ லோகமங்கையர் பாடுவதைக் கேட்டு மகிழும் மான்களை யுடையதுமாகிய த்வீபத்தைப் போற்றுகிறோம்.

(4)

जातीचम्पकपाटलादिसुमनस्सौरभ्यसंभावितं
ह्रींकारध्वनिकण्ठकोकिलकुहूप्रोल्लासिचूतद्रुमम् ।
आविर्भूतसुगन्धिचन्दनवनं दृष्टिप्रियं नन्दनं
चञ्चच्चञ्चलचञ्चरीकचटुलं चेतश्चिरं चिन्तय ॥

ஜாதீசம்பக பாடலாதிஸுமன: ஸௌரப்யஸம்பாவிதம்
ஹ்ரீங்காரத்வனி கண்டகோகிலகுஹூ

ப்ரோல்லாஸி சூதத்ருமம்।

ஆவிர்பூத ஸுகந்தி சந்தனவனம் த்ருஷ்டிப்ரியம்

நந்தனம்

சஞ்சச்சஞ்சல சஞ்சரீக சடுலம் சேத ஸ்சிரம்

சிந்தய॥

ஹே மனமே! நீ உல்லாஸமாகப் பறக்கும் தேனீக்கள் நிரம்பிய, கண்ணுக்கினிய நந்தன வனத்தை நினைத்து பூரிப்பாயாக. அந்த நந்தனவனத்தில் சந்தனமரங்களும், ஹ்ரீங் காரத்வனியெழுப்பும் குயிலின் குஹூ என்ற குரலால் குதூ ஹலிக்கும் மாமரங்களும், ஜாதி, சம்பகம், பாடலம் ஆகிய மரங்களும் வாசனை வீச விளங்குகின்றன.

(5)

परिपतितपरागैः पाटलक्षोणिभागो
विकसितकुसुमौघैः पीतचन्द्रार्करश्मिः।
अलिशुकपिकराजीकूजितैः श्रोत्रहारी
स्फुरतु हृदि मदीयें नूनमुद्यानराजः॥

பரிபதித பராகை: பாடல க்ஷோணி பாக:
விகஸித குஸுமௌகை: பீத சந்த்ராக்க ரச்மி:।
அலிசுகபிக ராஜீ கூஜிதை: ச்ரோத்ரஹாரீ
ஸ்புரது ஹ்ருதி மதீயே நூன முத்யாநராஜ:॥

பாடல் விருக்ஷத்தினடியில் மகரந்தப் பொடிகள் வீழ்ந் துள்ளது. மலர்ந்த புஷ்பங்கள் சந்திரன் சூர்யன் ஆகியோரது கிரணங்களை உட்கொள்கின்றன. தேனீக்கள், குயில்கள், கிளிகள் இவற்றின் கூச்சல் காதுக்கு இனிமையாக உள்ளது. இவை நிரம்பிய சிறந்த உத்யானம் என் மனதில் பிரகாசிக்கிறது.

**( 6 )**

रम्यद्वारपुरप्रचारतमसां संहारकारिप्रभ
स्फूर्जत्तोरणभारहारकमहाविस्तारहारद्युते ।
क्षोणीमण्डलहेमहारविलसत्संसारपारप्रद
प्रोद्यद्भक्तमनोविहार कनकप्राकार तुभ्यं नमः ॥

ரம்யத்வார புரப்ரசாரதமஸாம் ஸம்ஹார காரிப்ரப
ஸ்பூர்ஜத்தோரண பாரஹாரக மஹா
விஸ்தாரஹாரத்யுதே।
க்ஷோணீ மண்டல ஹேமஹார விலஸத்ஸம்ஸார
பாரப்ரத
ப்ரோத்யத் பக்த மனோவிஹார கநகப்ராகார
துப்யம் நம:॥

அடுத்து, அழகான முகப்பு வாயிலின் பக்கமுள்ள இருளைப் போக்கும் ஒளி பொருந்திய தோரணத்தின் பாரத்தை ஈர்க்கும் மிகப் பெரிய ஹாரத்தையுடையது தங்கமயப்ராகாரம். அதற்கும் நம் நமஸ்காரங்கள் உரித்தாகின்றன. அந்தப் ராகாரம், பூமியின் தங்க ஹாரமோவென்றதிசயிக்கத்தக்கதாயும், ஸம்ஸாரத்தினின்று கரையேற்றுவதாயும் பக்தர்களின் மனமகிழ்ச்சிக்குரியதாயும் உள்ளது.

**(7)**

उद्यत्कान्तिकलापकल्पितनभःस्फूर्जद्वितानप्रभः
सत्कृष्णागरुधूपवासितवियत्कोष्ठान्तरे विश्रुतः ।
सेवायातसमस्तदैवतगणैरासेव्यमानोऽनिशं
सोऽयं श्रीमणिमण्डपोऽनवरतं मच्चेतसि द्योतताम् ॥

உத்யத்காந்தி கலாபகல்பிதநப: ஸ்பூர்ஜத்விதாநப்ரப:
ஸத்க்ருஷ்ணாகரு தூப வாஸித
வியத்கோஷ்டாந்தரே விச்ருத:।
ஸேவாயாத ஸமஸ்ததைவத கணை: ஆஸேவ்ய
மாநோऽநிசம்
ஸோऽயம் ஸ்ரீ மணிமண்டபோऽனவரதம்
மச்சேதஸித்யோததாம்॥

சேவை நிமித்தம் வந்த தேவர்கள் அனைவரும் சேவிக்கும் இந்த மணிமண்டபம் என் மனதில் எப்பொழுதும் மிளிரட்டும். அந்த மண்டபம், மேல் நோக்கிப் பரவும் காந்திமண்டலமே விதானமாகக் கொண்டது. அதில் சந்தனப்பொடி தூபத்தின் மணம் ஆகாச வெளியை மணமிக்கதாகச் செய்கிறது.

(8)

क्वापि प्रोद्भटपद्मरागकिरणव्रातेन संध्यायितं
कुत्रापि स्फुटविस्फुरन्मरकतद्युत्या तमिस्रायितम् ।
मध्यालम्बिविशालमौक्तिकरुचा ज्योत्स्नायितं कुत्रचि -
न्मातः श्रीमणिमन्दिरं तव सदा वन्दामहे सुन्दरम् ॥

க்வாபி ப்ரோத்பட பத்மராக கிரணவ்ராதேந
ஸந்த்யாயிதம்
குத்ராபி ஸ்புட விஸ்புரன்மரகதத்யுத்யா
தமிஸ்ராயிதம்।
மத்யாலம்பி விசாலமௌக்திகருசா ஜ்யோத்ஸ்னாயிதம்
குத்ரசித்
மாத: ஸ்ரீ மணிமந்திரம் தவ ஸதா வந்தாமஹே
ஸுந்தரம்॥

ஹே தாயே! அழகிய உனது மணிமந்திரத்தை எப்பொழுதும் வணங்கிநிற்கிறோம். அம்மணிமந்திரத்தின் ஒரு பகுதியில் மிகப்பெரிய பத்மராகக்கற்களின் ஒளி வீசுவதால் ஸந்தியாகாலமோ வெனத் தோற்றமளிக்கிறது. வேறொரு பாகத்தில் மிகத் தெளிவாக மரகதப் பச்சைகளால் இருள்சூழ்ந்தது போலவும், நடுவில் தொங்கும் முத்து மாலைகளின் காந்தியால் நிலவு தோன்றியது போலவும் காட்சியளிக்கிறதே!

(9)

उत्तुङ्गालयविस्फुरन्मरकतप्रोद्यत्प्रभामण्डला -
न्यालोक्याङ्कुरितोत्सवैर्नवतृणाकीर्णस्थलीशङ्कया।
नीतो वाजिभिरुत्पथं बत रथः सूतेन तिग्मद्युते -
र्वल्गावल्गितहस्तमस्तशिखरं कष्टैरितः प्राप्यते ॥

உத்துங்காலயவிஸ்புரன்மரகதப்ரோத்யத்
ப்ரபாமண்டலா-
ந்யாலோக்யாங்குரிதோத்ஸவைர்நவத்ருணா
கீர்ண ஸ்தலீ சங்கயா।
நீதோவாஜிபிருத்பதம் பத ரத:ஸூதேந திக்மத்யுதே:
வல்காவல்கித ஹஸ்தமஸ்தசிகரம் கஷ்டைரித:
ப்ராப்யதே॥

ஹேதேவி! உனது உயரமான ஆலயத்திலுள்ள மரகதக்கற்களின் ஒளிமண்டலத்தை புதிய அருகம்புல் மண்டிய தரையோவெனத் திகைத்து, மகிழ்ச்சிபொங்க, சூர்யன் தேரிலுள்ள குதிரைகள் வேறுபக்கம் திரும்பியபொழுது, மிகப்பிரயாசையுடன் அவற்றின் கடிவாளத்தை இழுத்து அருணன் அஸ்தமன மலைச் சிகரத்தில் சேர்ப்பிக்க வேண்டியுள்ளது.

(10)

मणिसदनसमुद्यत्कान्तिधारानुरक्ते
वियति चरमसंध्याशङ्किनो भानुरथ्याः।
शिथिलितगतिकुप्यत्सूतहुङ्कारनादैः
कथमपि मणिगेहादुच्चकैरुच्चलन्ति ॥

மணிஸதந ஸமுத்யத்காந்திதாராநுரக்தே
வியதி சரமஸந்த்யாசங்கிநோ பானுரத்யா:।
சிதிலித கதி குப்யத்ஸூத ஹுங்காரநாதை:
கதமபி மணி கேஹாத்உச்சகைருச்சலந்தி॥

இன்னும் ஹேதேவி! உனது மணிமந்திரலுள்ள மணிகளின் காந்தியால் செவ்வொளி தோன்றிய பொழுது மாலை வேளைதான் வந்துவிட்டதென எண்ணி சூர்யன் குதிரைகள் சற்றுமெல்ல நடக்கத் தொடங்கி (மணிமந்திரம் வழியில்)

கோபித்துக்கொண்ட அருணனின் ஹூம் என்ற குரலால், பின்னும் உயரத்தில் செல்லத்துவங்குகின்றன.

(11)

भक्त्या किं नु समर्पितानि बहुधा रत्नानि पाथोधिना
किं वा रोहणपर्वतेन सदनं यैर्विश्वकर्माकरोत् ।
आः ज्ञातं गिरिजे कटाक्षकलया नूनं त्वया तोषिते
शम्भौ नृत्यति नागराजफणिना कीर्णा मणिश्रेणयः ॥

பக்த்யா கிம் நுஸமர்பிதாநி பஹுதா ரத்னாநி பாதோதிநா
கிம்வா ரோஹணபர்வதேந ஸதனம்
யைர்விச்வகர்மா கரோத்।
ஆ ஜ்ஞாதம் கிரிஜே! கடாக்ஷ கலயா நூநம்
த்வயாதோஷிதே
சம்பௌ ந்ருத்யதி நாகராஜபணிநா கீர்ணா
மணிச்ரேணய:।

ஹே பார்வதிதேவி! உனது மந்திரத்தை நிர்மாணித்த விச்வகர்மாவுக்கு வேண்டிய அளவு மணிகளையும் ரத்னங்களையும் சமுத்ரராஜனும், ரோஹணமலையும் பக்தியுடன் அளிக்கவில்லையோ! எனக்கு தெரிந்துவிட்டது! உன்கடாக்ஷ வீச்சைக்கண்டு மகிழ்ந்த சம்பு நடனம் புரியத்தொடங்கியதும் நாகராஜன் வேறு மணிகளை கொட்டிவிட்டானே!.

(12)

विदूरमुक्तवाहनैर्विनम्रमौलिमण्डलै -
र्निबद्धहस्तसम्पुटैः प्रयत्नसंयतेन्द्रियैः ।
विरिञ्चिविष्णुशङ्करादिभिर्मुदा तवाम्बिके
प्रतीक्ष्यमाणनिर्गमो विभाति रत्नमण्डपः ॥

விதூரமுக்தவாஹநைர்விநம்ரமௌலி மண்டலை:
நிபத்த ஹஸ்தஸம்புடை:ப்ரயத்னஸம்ய
தேந்த்ரியை:।

விரிஞ்சி விஷ்ணு சங்கராதிபிர்முதா தவாம்பிகே
ப்ரதீக்ஷ்யமாண நிர்கமோ விபாதி ரத்னமண்டப:॥

ஹே அம்பிகே! உனது ரத்னமண்டபத்தை நோக்கி வரும் அனைவரும் வெகு தூரத்திலேயே வாஹனங்களை விட்டுவிட்டு, தலைவணங்கியும், கைகூப்பியும், புலன்களை அடக்கியவாறும் பிரம்மன், விஷ்ணு, சிவன் ஆகியோர் கூட உனது வரவை எதிர்பார்த்து நிற்கின்றனர்.

(13)

ध्वनन्मृदङ्गकाहलः प्रगीतकिन्नरीगणः
प्रनृत्तदिव्यकन्यकः प्रवृत्तमङ्गलक्रमः ।
प्रकृष्टसेवकव्रजः प्रहृष्टभक्तमण्डलो
मुदे ममास्तु संततं त्वदीयरत्नमण्डपः ॥

த்வநன்ம்ருதங்க காஹல: ப்ரகீத கிந்நரீகண:
ப்ரந்ருத்த திவ்ய கன்யக: ப்ரவ்ருத்தமங்கலக்ரம:।
ப்ரக்ருஷ்ட ஸேவகவ்ரஜ: ப்ரஹ்ருஷ்ட பக்தமண்டலோ
முதே மமாஸ்து ஸந்ததம் த்வதீய ரத்னமண்டப:॥

ஹே தேவி! உனது ரத்ன மண்டபத்தில் ம்ருதங்கம், காஹலம் முதலிய லயவாத்யங்கள் முழங்குகின்றன. கிந்நரீ கணங்கள் நடனமாடுகின்றனர். தேவ கன்னியரும் நடனம் புரிகின்றனர். மங்களகார்யங்கள் நடக்கின்றன. ஸேவகர்கள் ஒதுக்கப்பட்டு, பக்தர்கள் மகிழ்ந்து உள்ளனர்.

(14)

प्रवेशनिर्गमाकुलैः स्वकृत्यरक्तमानसै -
र्बहिः स्थितामरावलीविधीयमानभक्तिभिः ।
विचित्रवस्त्रभूषणैरुपेतमङ्गनाजनैः
सदा करोतु मङ्गलं ममेह रत्नमण्डपम् ॥

ப்ரவேசநிர்கமாகுலை: ஸ்வக்ருத்யரக்தமானஸ:
பஹிஸ்திதாமராவலீ விதீயமாந பக்திபி:।
விசித்ர வஸ்த்ர பூஷணை: உபேத மங்கநாஜநை:
ஸதா கரோது மங்கலம் மமேஹ ரத்னமண்டபம்॥

ஹேதேவி! உனது ரத்ன மண்டபத்தினுள் பரபரப்புடன் போவோரும் வருவோருமாய் உள்ளனர். சிலர் தங்கள் கார்யத்தில் கருத்துடன் உள்ளனர். வெளியில் உள்ளோர் பக்தியுடன் நிற்கின்றனர். பற்பலவஸ்திரம், ஆபரணம் அணிந்த பெண்களும் உள்ளனர். எனக்கு அம்மண்டபம் மங்கலம் உண்டாக்கட்டும்.

(15)

सुवर्णरत्नभूषितैर्विचित्रवस्त्रधारिभि –
गृहीतहेमयष्टिभिर्निरुद्धसर्वदेवतैः ।
असंख्यसुन्दरीजनैः पुरस्थितैरधिष्ठितो
मदीयमेतु मानसं त्वदीयतुङ्गतोरणः ॥

ஸுவர்ணரத்ன பூஷிதை: விசித்ர வஸ்த்ரதாரிபி:
க்ருஹீத ஹேமயஷ்டிபி: நிருத்தஸர்வதைவதை:।
அஸங்க்யஸுந்தரீஜனை: புர: ஸ்திதைரதிஷ்டிதோ
மதீயமேது மானஸம் த்வதீயதுங்கதோரண:॥

தங்கம், ரத்னம் இவற்றால் அலங்கரிக்கப்பட்டு, பல்வேறு வஸ்திரம் தரித்து, கையில் கம்புடன் தேவதைகளை நிறுத்துவதுடன் பாதுகாப்பிலுள்ள பல சுந்தரிகள் குழுமிய உனது வானளாவிய தோரணவாயில் என் மனதில் தோற்றமளிக்கிறது.

(16)

इन्द्रादींश्च दिगीश्वरान्सहपरिवारानथो सायुधा–
न्योषिद्रूपधरान्स्वदिक्षु निहितान्संचिन्त्य हृत्पङ्कजे ।
शंखं श्रीवसुधारया वसुमतीयुक्तं च पद्मं स्मर –
न्कामं नौमि रतिप्रियं सहचरं प्रीत्या वसन्तं भजे ॥

இந்த்ராதீம்ஸ்ச திகீச்வரான் ஸஹபரீவாரா நதோ
ஸாயுதான்
யோஷித்ருபதரான் ஸ்வதிக்ஷு நிஹிதான்
ஸஞ்சிந்த்ய ஹ்ருத்பங்கஜே।
சங்கம் ஸ்ரீவஸுதாரயா வஸுமதீயுக்தம் ச பத்மம் ஸ்மரன்
காமம் நௌமி ரதிப்ரியம் ஸஹசரம் ப்ரீத்யா
வஸந்தம் பஜே॥

தங்கள் தங்கள் பரிவாரங்களோடும், ஆயுதங்களோடும் சேர்ந்த - ஸ்திரீவேஷம் பூண்டு அவரவர் திசைகளில் நிறுத்தப் பட்டுள்ள - இந்த்ராதி திக்பாலகர்களை மனதிற்சிந்தித்து, ஸ்ரீவஸுதாரையுடன் சங்கத்தையும், வஸுமதியுடன் பத்மத்தையும் ஸ்மரித்து, ரதியின் கணவன் மன்மதனையும், அன்புத் தோழன் வஸந்தனையும் நினைவு கூர்வேன்.

(17)

गायन्तीः कलवीणयातिमधुरं हुंकारमातन्वती –
द्वाराभ्यासकृतस्थितीरिह सरस्वत्यादिकाःपूजयन् ।
द्वारे नौमि मदोन्मदं सुरगणाधीशं मदेनोन्मदां
मातङ्गीमसिताम्बरां परिलसन्मुक्ताविभूषां भजे ॥

காயந்தீ: கல வீணயா திமதுரம் ஹுங்காரமாதந்வதீ:
த்வாராப்யாஸ க்ருதஸ்திதீரிஹ ஸரஸ்வத்யாதிகா:
பூஜயன்।
த்வாரேநௌமி மதோன்மதம் ஸுரகணாதீசம் மதே
னோன்மதாம்
மாதங்கீமஸிதாம்பராம் பரிலஸன்முக்தா
விபூஷாம் பஜே॥

மிக இனிமையாக வீணை வாசித்துக்கொண்டும் பாடிக்கொண்டும் இருக்கிறவர்களும், உனது மந்திரத்தின் வாயிற்புரம் இருந்து கொண்டு 'ஹூம்' என்று சொல்லிக் கொண்டுமிருக்கிற ஸரஸ்வதீ முதலியவர்களை பூஜித்துவிட்டு, வாயிற்படியில் தேவகணங்களுக்கு தலைவரான கணாதீசரையும், மதம் கொண்டு கருப்புவஸ்திரமணிந்த மாதங்கியையும் சேவிக்கிறேன்.

(18)

कस्तूरिकाश्यामलकोमलाङ्गीं
कादम्बरीपानमदालसाङ्गीम् ।
वामस्तनालिङ्गितरत्नवीणां
मातङ्गकन्यां मनसा स्मरामि ॥

கஸ்தூரிகாச்யாமல கோமலாங்கீம்
காதம்பரீபானமதாலஸாங்கீம்।
வாமஸ்தனாலிங்கித ரத்ன வீணாம்
மாதங்க கன்யாம் மனஸா ஸ்மராமி॥

கஸ்தூரி போன்று கருநீல நிறமுள்ளவளும், காதம்பரீ பானத்தால் மதமேறிய உடலையுடையவளும், இடது ஸ்தனத்துடன் இணைந்த ரத்ன வீணையை யுடையவளுமான மாதங்ககன்யகையை மனதில் ஸ்மரிக்கிறேன்.

(19)

विकीर्णचिकुरोत्करे विगलिताम्बराडम्बरे
मदाकुलितलोचने विमलभीषणोद्भासिनि।
तिरस्करिणि तावकं चरणपङ्कजं चिन्तयन्
करोमि पशुमण्डलीमलिकमोहदुग्धाशयाम् ॥

விகீர்ண சிகுரோத்கரே விகலிதாம்பராடம்பரே
மதாகுலித லோசனே விமல பூஷணோத் பாஸினி।
திரஸ்கரிணி தாவகம் சரணபங்கஜம் சிந்தயன்
கரோமி பசுமண்டலீம் அலிகமோஹதுக்தாசயாம்॥

குலைந்த கேசபாசங்களும், நழுவிய வஸ்திரமும், மதம் கொண்ட கண்களும், பற்பல ஆபரணங்களும் கொண்ட திரஸ்கரிணி (திரைசீலை) தேவியே உனது திருவடியை நினைத்துக் கொண்டு சுற்றுப்புறதேவதைக் கூட்டத்தை பாற்கடல் மயக்கத்தை கொண்டதாகச் செய்கிறேன்.

(20)

प्रमत्तवारुणीरसैर्विघूर्णमानलोचनाः
प्रचण्डदैत्यसूदनाः प्रविष्टभक्तमानसाः।
उपोढकज्जलच्छविच्छटाविराजिविग्रहाः
कपालशूलधारिणीः स्तुवे त्वदीयदूतिकाः ॥

ப்ரமத்த வாருணீரஸைர் விகூர்ணமானலோசநா:
ப்ரசண்டதைத்ய ஸூதனா: ப்ரவிஷ்ட
பக்தமானஸா:।
உபோட கஜ்ஜலச்சவிச்சடா விராஜி விக்ரஹா:
கபால சூல தாரிணீ: ஸ்துவே த்வதீய தூதிகா:॥

ஹேதேவி! உனது ஏவலரைப் போற்றுகிறேன். அவர் மதுபானத்தால் சுழலும் கண்களைக் கொண்டவர், பயங்கரமான ராக்ஷஸர்களையும் அழிப்பவர், வந்துள்ள பக்தர்களை கருத்தில் கொண்டவர், கரியமை கொண்டு தடவிய உடலையுடையவர்கள், கபாலம் சூலம் இவற்றை ஏந்தியவராவர்.

(21)

स्फूर्जन्नव्ययवाङ्कुरोपलसिताभोगैः पुरःस्थापितै -
दीपोद्भासिशरावशोभितमुखैः कुम्भैर्नवैः शोभिना।
स्वर्णाबद्धविचित्ररत्नपटलीचञ्चत्कपाटश्रिया
युक्तं द्वारचतुष्टयेन गिरिजे वन्दे मणीमन्दिरम् ॥

ஸ்பூர்ஜந்நவ்யயவாங்குரோபலஸிதா போகை: புர:
ஸ்தாபிதை:
தீபோத்பாஸிசராவசோபித முகை: கும்பைர்
நவை:சோபிநா
ஸ்வர்ணாபத்த விசித்ரரத்னபடலீ சஞ்சத்கபாடச்ரியா
யுக்தம் த்வாரசதுஷ்டயேந கிரிஜே வந்தே
மணீமந்திரம்॥

ஹேபார்வதி! உனது மணி மந்திரத்தை நான் வணங்குகிறேன். அம்மணி மந்திரம், தங்கத்தில் கட்டிய பல மணிகற்கள் மின்னும் கதவுகளையுடைய நான்கு வாயில்கள் கொண்டது. புதுயவதான்யமுளைபோல் விளங்கும் உட்புறத்தை யுடையவையும், எரியும் தீபத்துடன் கூடிய தாழிபோல் உள்ள முகத்துடன் கூடியவையுமான புதுகும்பங்கள் முன்னே வைக்கப்பட்டுள்ளன அங்கே.

(22)

आस्तीर्णारुणकम्बलासनयुतं पुष्पोपहारान्वितं
दीप्तानेकमणिप्रदीपसुभगं राजद्वितानोत्तमम् ।
धूपोद्गारिसुगन्धिसंभ्रममिलद्भृङ्गावलीगुञ्जितं
कल्याणं वितनोतु मेऽनवरतं श्रीमण्डपाभ्यन्तरम् ॥

ஹேதேவி! உனது ஸ்ரீமண்டபத்தின் உட்பாகம் தூபம் கமழ்வதால் மதிமயங்கி ரீங்காரமிடும் தேனீக்கூட்டம் பரவி யுள்ளது. பலதீபங்கள் எரிய அழகு சொட்டும் அவ்வரிய மணி மண்டபம் செவ்விய கம்பளாஸனம் விரித்து, புஷ்பக்காணிக்கை விரவியதாயும், நல்லவிதானமுள்ளதாகவும் இருக்கிறது.

(23)

कनकरचिते पञ्चप्रेतासनेन विराजिते
मणिगणचिते रक्तश्वेताम्बरास्तरणोत्तमे ।
कुसुमसुरभौ तल्पे दिव्योपधानसुखावहे
हृदयकमले प्रादुर्भूतां भजे परदेवताम् ॥

கநக ரசிதே பஞ்சப்ரேதாஸநேந விராஜிதே
மணிகணசிதே ரக்தச்வேதாம்பராஸ்தர
ணோத்தமே।
குஸுமஸுரபௌ தல்பே திவ்யோபதானஸுகாவஹே
ஹ்ருதயகமலே ப்ராதுர்பூதாம் பஜே பரதேவதாம்॥

சுவர்ணத்தினாலானதும், புஷ்பங்கள் தூவி வாஸனை யுடன் கூடியதும் திவ்யமான தலையணைகளால் சுகமானதுமான ஹ்ருதய கமலத்தில் தோன்றும் பரதேவதையை நான் போற்று கிறேன். அங்கு பஞ்சப்ரேதாஸனமும், ரக்த ச்வேத நிறமுள்ள விரிப்பும், வைரக்கற்களால் பதிக்கப்பட்டுமுள்ளது அவ்வரியாஸனம்.

(24)

सर्वाङ्गस्थितिरम्यरूपरुचिरां प्रातः समभ्युत्थितां
जृम्भामञ्जुमुखाम्बुजां मधुमदव्याघूर्णदक्षित्रयाम् ।
सेवायातसमस्तसंनिधिसखीः संमानयन्तीं दृशा
संपश्यन्परदेवतां परमहो मन्ये कृतार्थं जनुः ॥

ஸர்வாங்கஸ்திதிரம்யருசிராம் ப்ராத: ஸமப்யுத்திதாம்
ஜ்ரும்பாமஞ்ஜு முகாம்புஜாம் மதுமத
வ்யாகூர்ணதக்ஷி த்ரயாம்।
ஸேவாயாதஸமஸ்தஸந்நிதிஸகீ: ஸம்மாநயந்தீம்த்ருசா
ஸம்பச்யன்பரதேவதாம் பரமஹோ மன்யே
க்ருதார்த்தம் ஜனு:॥

ஸர்வாங்கங்களும் கிடந்தநிலையால் அழகிய ரூபங் கொண்டு, காலையில் எழுந்து, கொட்டாவியுடன் அழகு மிளிர, மதுபானத்தால் சுழலும் முக்கண்பரப்புடன், சேவைக்காக வந்த நெருங்கிய தோழிகளை பார்வையால் மட்டும் கௌரவிக்கும் பரதேவதையை கண்ணாரக்கண்டு எனது ஜன்மம் ஸபலமானதை எண்ணி மகிழ்கிறேன்.

(25)

उच्चैस्तोरणवर्तिवाद्यनिवहध्वाने समुज्जृम्भिते
भक्तैर्भूमिविलग्नमौलिभिरलं दण्डप्रणामे कृते ।
नानारत्नसमूहनद्धकनकस्थालीसमुद्भासितां
प्रातस्ते परिकल्पयामि गिरिजे नीराजनामुज्ज्वलाम् ॥

உச்சைஸ்தோரணவர்திவாத்ய நிவஹத்வாநே
ஸமுஜ்ஜ்ரும்பிதே,
பக்தைர் பூமி விலக்ன மௌலி பிரலம்
தண்டப்ரணாமேக்ருதே।
நாநாரத்ன ஸமூஹநத்த கனகஸ்தாலீஸ முத்பாஸிதாம்
ப்ராதஸ்தே பரிகல்பயாமி கிரிஜே நீராஜனா
முஜ்ஜ்வலாம்॥

வானளாவிய தோரணவாயிலில் வாத்யத்வனிகள் அதிர, பக்தர்கள் பூமியில் விழுந்து தண்டப்ரணாமம் செய்ய, பலவித ரத்னங்கள் பதித்த தங்கத்தட்டில் எரியும் நீராஜனத்தை, ஹே பார்வதி! காலையில் உனக்கு காட்டி மகிழ்கிறேன்.

(26)

पाद्यं ते परिकल्पयामि पदयोरर्घ्यं तथा हस्तयोः
सौधीभिर्मधुपर्कमम्ब मधुरं धाराभिरास्वादय ।
तोयेनाचमनं विधेहि शुचिना गाङ्गेन मत्कल्पितं
साष्टाङ्गं प्रणिपातमीशदयिते दृष्ट्वा कृतार्थीकुरु ॥

பாத்யம் தேபரிகல்பயாமி பதயோரர்க்யம்
ததாஹஸ்தயோ:
ஸௌதீபி: மதுபர்கமம்ப மதுரம் தாராபிராஸ்வாதய।
தோயே நாசமநம் விதேஹி சுசிநா காங்கேந மத்கல்பிதம்
ஸாஷ்டாங்கம் ப்ரணிபாத மீசதயிதே த்ருஷ்ட்யா
க்ருதார்தீகுரு॥

ஹே ஈசதயிதே! உனக்கு பாதங்களில் பாத்யத்தையும், கைகளில் அர்க்யத்தையும் ஸமர்பிக்கிறேன். ஹே அம்ப! அம்ருத மயதாரைகளால் இனிய மதுபர்க்கம் இதோ ஆஸ்வாதனம் செய்யலாமே! சுத்தமான கங்கை ஜலத்தால் ஆசமனம் செய்து கொள்ளலாம். ஸாஷ்டாங்க நமஸ்காரத்தையும் ஏற்று என்னை க்ருதார்த்தனாக செய்ய வேணும்.

(27)

मातःपश्य मुखाम्बुजं सुविमले दत्ते मया दर्पणे
देवि स्वीकुरु दन्तधावनमिदं गङ्गाजलेनान्वितम् ।
सुप्रक्षालितमाननं विरचय स्निग्धाम्बरप्रोञ्छनं
द्रागङ्गीकुरु तत्त्वमम्ब मधुरं ताम्बूलमास्वादय ॥

மாத: பச்ய முகாம்புஜம் ஸுவிமலே தத்தே மயா தர்பணே
தேவி ஸ்வீகுரு தந்ததாவன மிதம் கங்காஜலே
நான்விதம்।
ஸுப்ரக்ஷாலிதமாநநம் விரசய ஸ்நிக்தாம்பரப் ரோஞ்சநம்
த்ராகங்கீகுரு தத்வமம்ப மதுரம் தாம்பூல
மாஸ்வாதய॥

ஹே தாயே! நான் ஸமர்பித்த கண்ணாடியில் முக கமலத்தை தர்சனம் செய்துகொள்; கங்காஜலம் கொண்டு தந்த தாவனத்தை ஏற்கலாமே! முகத்தை நன்கு அலம்பிக்கொள்ளலாம் உடனே மெல்லிய வஸ்திரத்துண்டால் முகத்தை துடைத்துக் கொண்டு மதுரமான தாம்பூலத்தையும் ஆஸ்வாதனம் செய்யலாமே!

(28)

निधेहि मणिपादुकोपरि पदाम्बुजं मज्जना –
लयं व्रज शनैः सखीकृतकराम्बुजालम्बनम् ।
महेशि करुणानिधे तव दृगन्तपातोत्सुका –
न्विलोकय मनागमूनुभयसंस्थितान्दैवतान् ॥

நிதேஹி மணிபாதுகோபரி பதாம்புஜம் மஜ்ஜநா-
லயம்வ்ரஜசனை: ஸகீக்ருதகராம்புஜாலம்பனம்।
மஹேசி கருணாநிதே தவ த்ருகந்தபாதோத்ஸுகான்
விலோகய மநாகமூனுபய ஸம்ஸ்திதான்
தைவதான்॥

ஹேமஹேசி! கருணாநிதே! மணிபாதுகையின் மீது கால் வைத்து மெல்ல குளியலறைக்குச் செல்லலாமே! அப்பொழுது தோழிகள் கைகொடுத்து பிடித்துக் கொள்வார்கள். உனது கடைக் கண் பார்வை விழ வேண்டுமென விழையும் இருபுறமும் நின்று எதிர்பார்த்திருக்கும் தேவர்களை சற்று கண்படப்பார்க்கலாமே.

(29)

हेमरत्नवरणेन वेष्टितं विस्तृतारुणवितानशोभितम् ।
सज्जसर्वपरिचारिकाजनं पश्य मज्जनगृहं मनो मम ॥

ஹேமரத்ன வரணேந வேஷ்டிதம் விஸ்த்ருதாருண
விதாந சோபிதம்।
ஸஜ்ஜஸர்வபரிசாரிகாஜநம் பச்ய மஜ்ஜநக்ருஹம்
மநோமம॥

தங்கம், ரத்னம் இவற்றைப் பதித்து சுற்று மறைவு கொண்டதும், சிவப்பு விதானம் விரிக்கப்பட்டு அழகாய் இருப்பதும், பரிசாரிகைகள் அனைவரும் தயாராக இருப்பதுமாகிய என் மனமாகிய குளியலறையைக் காணலாமே!

(30)

कनककलशजालस्फाटिकस्नानपीठा -
द्युपकरणविशालं गन्धमत्तालिमालम् ।
स्फुरदरुणवितानं मञ्जुगन्धर्वगानं
परमशिवमहेले मज्जनागारमेहि ॥

கனக கலச ஜால ஸ்பாடிகஸ்நான பீடா-
த்யுபகரண விசாலம் கந்தமத்தாலிமாலம்।
ஸ்புரதருண விதானம் மஞ்ஜுகந்தர்வகானம்
பரமசிவமஹேலே மஜ்ஜனாகாரமேஹி॥

தங்கச் சொம்புகள், ஸ்படிகமயமான ஸ்நான பீடம் முதலிய உபகரணங்களடங்கியதும், வாஸனையால் ஈர்க்கப்பட்டு பறந்து வரும் தேனீக்களையுடையதும், சிவப்பு விதானம் பொருந்தியதும், இனிய கந்தர்வகானம் முழங்குவதுமாகிய ஸ்நான மண்டபத்திற்கு வந்து அருளலாமே!

(31)

पीनोत्तुङ्गपयोधराः परिलसत्सम्पूर्णचन्द्रानना
रत्नस्वर्णविनिर्मिताः परिलसत्सूक्ष्माम्बरप्रावृताः ।
हेमस्नानघटीस्तथा मृदुपटीरुद्वर्तनं कौसुमं
तैलं कङ्कतिकां करेषु दधतीर्वन्देऽम्ब ते दासिकाः ॥

பீனோத்துங்கபயோதரா: பரிலஸத்ஸம் பூர்ண
சந்த்ராநநா:
ரத்னஸ்வர்ண விநிர்மிதா: பரிலஸத்ஸ்வர்ணாம்
பரப்ராவ்ருதா:।

ஹேமஸ்நாந கடீஸ் ததா ம்ருது படீ ருத்வர்தனம்
கௌஸுமம்

தைலம் கங்கதிகாம் கரேஷு தததீர்வந்தேம்ப
தேதாஸிகா:॥

ஹே அம்ப பருத்து உயர்ந்த மார்பகங்களையுடையவர்களும், சந்திரன் போன்ற முகமுடையவர்களும், தங்கமே உருவானவர்களும், தங்கமய பட்டாடை உடுத்தியவர்களும், தங்கக் குடங்களையும், ம்ருதுவான உடுப்புக்களையும், புஷ்பப் பொடிகளையும், தைலம், சீப்பு ஆகியவற்றையும் கையில் கொண்டு வருபவர்களுமான உனது பரிசாரகப் பெண்களை வணங்குகிறேன்.

(32)

तत्र स्फाटिकपीठमेत्य शनकैरुत्तारितालंकृति -
नीचैरुज्झितकञ्चुकोपरिहितारक्तोत्तरीयाम्बरा ।
वेणीबन्धमपास्य कङ्कतिकया केशप्रसादं मना -
क्कुर्वाणा परदेवता भगवती चित्ते मम द्योतताम् ॥

தத்ரஸ்பாடிகபீடமேத்ய சநகை ருத்தாரிதாலங்க்ருதி:
நீசை ருஜ்ஜிதகஞ்சுகோபரி ஹிதாரக்தோத்
தரீயாம்பரா

வேணீபந்தமபாஸ்ய கங்கதிகயா கேசப்ரஸாதம் மநாக்
குர்வாணா பரதேவதா பகவதீ சித்தே
மமத்யோததாம்॥

அப்பொழுது அங்கே, ஸ்படிக பீடத்திற்கு வந்து நகைகளை கழட்டி, மெல்ல கஞ்சுகம், உத்தரீயம் இவற்றைக் களைந்து, பின்னலை அவிழ்த்து சீப்பினால் சற்று கேசங்களை ஒழுங்குச் செய்து கொண்டிருக்கிற பரதேவதை என் மனதில் தோன்றட்டுமே!

(33)

अभ्यङ्गं गिरिजे गृहाण मृदुना तैलेन सम्पादितं
काश्मीरैरगुरुद्रवैर्मलयजैरुद्वर्तनं कारय ।
गीते किंनरकामिनीभिरभितो वाद्ये मुदा वादिते
नृत्यन्तीमिह पश्य देवि पुरतो दिव्याङ्गनामण्डलीम् ॥

அப்யங்கம் கிரிஜே க்ருஹாண ம்ருதுநா தைலேந ஸம்பாதிதம்
காச்மீரைரகருத்ரவைர்மலயஜைருத்வர்தநம் காரய।
கீதே கிந்நரகாமிநீ பிரபிதோ வாத்யே முதா வாதிதே
ந்ருத்யந்தீமிஹ பச்யதேவி புரதோதிவ்யாங்கநா
மண்டலீம் ॥

ஹே பார்வதி! ம்ருதுவான தைலத்தை உனது உடம்பில் தடவிக் கொள். காச்மீரத்து அகருக்குழம்பினாலும், மலய மலைச் குழம்பினாலும் உடம்பிற்குத் தேய்த்து உத்வர்தனம் செய்து கொள். கிந்நரஸ்திரீகள் பாடுவதையும், வாத்யங்கள் வாசிக்கதேவலோக மங்கையர் ஆடுவதையும் பார்த்து ரசிப்பாயாக!

(34)

कृतपरिकरबन्धास्तुङ्गपीनस्तनाढ्या
मणिनिवहनिबद्धा हेमकुम्भीर्दधानाः ।
सुरभिसलिलनिर्यद्गन्धलुब्धालिमालाः
सविनयमुपतस्थुः सर्वतः स्नानदास्यः ॥

க்ருதபரிகரபந்தா: துங்கபீநஸ்தனாட்யா:
மணிநிவஹநிபத்தா ஹேமகும்பீர்ததாநா:।
ஸுரபிஸலிலநிர்யத்கந்தலுப்தாலிமாலா:
ஸவிநயமுபதஸ்து: ஸர்வத: ஸ்நானதாஸ்ய:॥

பரிகரபந்தம் செய்து கொண்டு, பருத்துயர்ந்த ஸ்தனங்களுடையவர்களாய், ரத்னங்கள் பதித்த தங்கக் குடங்களை கையில் ஏந்தியவர்களாய் வரும்பொழுது வாசனைமிக்க தண்ணீரின் காரணமாக தேனீக்கள் பின்தொடர்ந்து மொய்க்க ஸ்நான சேவகிகள் வந்துவிட்டார்களே!

(35)

उद्गन्धैरगरुद्रवैः सुरभिणा कस्तूरिकावारिणा
स्फूर्जत्सौरभयक्षकर्दमजलैः काश्मीरनीरैरपि ।
पुष्पाम्भोभिरशेषतीर्थसलिलैः कर्पूरपाथोभरैः
स्नानं ते परिकल्पयामि गिरिजे भक्त्या तदङ्गीकुरु ॥

உத்கந்தை ரகருத்ரவை: ஸுரபிணா கஸ்தூரிகாவாரிணா
ஸ்பூர்ஜத்ஸௌரப யக்ஷகர்தமஜலை: காச்மீர
நீரைரபி
புஷ்பாம்போபிரசேஷதீர்தஸலிலை: கர்பூரபாதோபரை:
ஸ்நானம் தே பரிகல்பயாமி கிரிஜே
பக்த்யாததங்கீகுரு॥

ஹே கிரிஜே! மணம்மிக்கதான அகருத்ரவத்தாலும், கஸ்தூரித் தண்ணீராலும் மணம் வீசும் வாஸனைச்சந்தன ஜலத்தாலும், காச்மீரப்பன்னீராலும், பல தீர்த்தங்களிலிருந்து கொண்டு வந்த தண்ணீராலும், புஷ்பம், கற்பூரம் கலந்த தண்ணீராலும் பக்தியுடன் உனக்கு ஸ்நானம் செய்விக்கிறேன். அதை ஏற்க வேணுமே!

(36)

प्रत्यङ्गं परिमार्जयामि शुचिना वस्त्रेण संप्रोञ्छनं
कुर्वे केशकलापमायततरं धूपोत्तमैर्धूपितम् ।
आलीवृन्दविनिर्मितां यवनिकामास्थाप्य रत्नप्रभं
भक्तत्राणपरे महेशगृहिणि स्नानाम्बरं मुच्यताम् ॥

ப்ரத்யங்கம் பரிமார்ஜாமி சுசிநா வஸ்த்ரேண
ஸம்ப்ரோஞ்சனம்
குர்வே கேச கலாப மாயததரம்
தூபோத்தமைர்தூபிதம்।
ஆலீப்ருந்த விநிர்மிதாம் யவநிகாமாஸ்தாப்ய
ரத்னப்ரபம்
பக்தத்ராணபரே மஹேசக்ருஹிணி
ஸ்நானாம்பரம்முச்யதாம்॥

ஹே பக்தர்களைக்காக்கும் மஹேசர்க்ருஹிணியே! உனது ஒவ்வொரு அங்கங்களையும் சுத்த வஸ்திரத்தால் துடைத்து, மிக நீண்ட கேசகலாபத்தை தூபத்தை புகைத்து உலரவைக்கிறேன். ஸகிகள் அமைத்த திரைசீலைக் குள்ளிலிருந்து ஸ்நான வஸ்திரத்தை களையலாமே!

(37)

पीतं ते परिकल्पयामि निबिडं चण्डातकं चण्डिके
सूक्ष्मं स्निग्धमुरीकुरुष्व वसनं सिन्दूरपूरप्रभम्।
मुक्तारत्नविचित्रहेमरचनाचारुप्रभाभास्वरं
नीलं कञ्चुकमर्पयामि गिरिशप्राणप्रिये सुन्दरि ॥

பீதம்தே பரிகல்பயாமி நிபிடம் சண்டாதகம் சண்டிகே
ஸூக்ஷ்மம் ஸ்நிக்தமுரீகுருஷ்வ வஸனம்
ஸிந்தூரபூரப்ரபம்।
முக்தாரத்ன விசித்ரஹேமரசனா சாருப்ரபாபாஸ்வரம்
நீலம் கஞ்சுகமர்பயாமி கிரிசப்ராணப்ரியே
ஸுந்தரி॥

ஹே சண்டிகே! உனக்கு மஞ்சள் நிறமான உடலோடு ஒட்டிய உள்சட்டையை அர்பிக்கிறேன். மெல்லிய, வழவழப்பான சிவந்த பட்டாடையை ஏற்பாயாக! முத்து, ரத்னங்கள் இன்னும் ஜரிகை வேலைப்பாடுகளமைத்து பகட்டான நீலநிற கஞ்சுகத்தையும் அணிவாயாக!

(38)

विलुलितचिकुरेण च्छादितांसप्रदेशे
मणिनिकरविराजत्पादुकान्यस्तपादे।
सुललितमवलम्ब्य द्राक्सखीमंसदेशे
गिरिशगृहिणि भूषामण्टपाय प्रयाहि ॥

விலுலிதசிகுரேணச்சாதிதாம்ஸப்ரதேசே
மணிநிகரவிராஜத் பாதுகாந்யஸ்தபாதே।

ஸுலலிதமவலம்ப்ய த்ராக்ஸகீமம்ஸ தேசே
கிரிசக்ருஹிணி பூஷா மண்டபாய ப்ரயாஹி॥

கலைந்து விரிந்து கிடக்கும் கேசத்தால் தோள் புறம் மறைக்கப்பட்டுள்ளது. ஹேபரமேச்வரன் பார்யயே! நீ மணிகள் பதித்த பாதுகைகளில் கால் வைத்து, ஸகிகளின் தோளைப் பிடித்துக்கொண்டு அலங்காரமண்டபம் வரலாமே!

(39)

लसत्कनककुट्टिमस्फुरदमन्दमुक्तावली
समुल्लसितकान्तिभिः कलितशक्रचापव्रजे ।
महाभरणमण्डपे निहितहेमसिंहासनं
सखीजनसमावृतं समधितिष्ठ कात्यायनि ॥

லஸத்கநக குட்டி மஸ்புரதமந்த முக்தாவலீ-
ஸமுல்லஸித காந்திபி: கலித சக்ரசாபவ்ரஜே
மஹாபரண மண்டபே நிஹிதஹேமஸிம்ஹாஸநம்
ஸகீஜனஸமாவ்ருதம் ஸமதிதிஷ்ட காத்யாயநி॥

இந்த அலங்காரமண்டபத்தில் தங்கமயமான மேடை மீது முத்து மாலைகள் தொங்குவதால் இந்த்ரவில் அமைப்பின் அழகு மிளிர்கிறது. அங்கு ஒரு தங்கஸிம்மாஸனம் போடப்பட்டு அருகில் ஸகீஜனங்களும் உள்ளனர். அந்த சிம்மாஸனத்தில் அமரலாமே, ஹே காத்யாயனி!

(40)

स्निग्धं कङ्कतिकामुखेन शनकैःसंशोध्य केशोत्करं
सीमन्तं विरचय्य चारु विमलं सिन्दूररेखान्वितम् ।
मुक्ताभिर्ग्रथितालकां मणिचितैः सौवर्णसूत्रैःस्फुटं
प्रान्ते मौक्तिकगुच्छकोपलसितां ग्रथ्नामि वेणीमिमाम् ॥

ஸ்நிக்தம் கங்கதிகாமுகேந சநகை: ஸம்சோத்ய
கேசோத்கரம்
ஸீமந்தம் விரசய்ய சாருவிமலம்
ஸிந்தூரரேகான்விதம்

முக்தாபிர்க்ரதிதாலகாம் மணிசிதை:
ஸௌவர்ணஸூத்ரை: ஸ்புடம்
ப்ராந்தே மௌக்திககுச்சகோ பலஸிதாம் கரத்நாமி
வேணீமிமாம்॥

தேவி! உனது மழமழப்பான கேசக்கற்றையை சீப்பின் நுனியால் மெல்ல ஒழுங்குபடுத்தி, ஸிந்தூரக் கோட்டுடன் சீமந்தத்தையும் சீர்படுத்தி, மணியும் முத்தும் கலந்து கோர்த்த தங்க நூல் இழையால் பின்னலைப் பின்னும்பொழுது, நுனியில் முத்துக்குஞ்சலம் இணைக்கிறேன்.

(41)

विलम्बिवेणीभुजगोत्तमाङ्ग –
स्फुरन्मणिभ्रान्तिमुपानयन्तम् ।
स्वरोचिषोल्लासितकेशपाशं
महेशि चूडामणिमर्पयामि ॥

விலம்பிவேணீ புஜகோத்தமாங்க-
ஸ்புரன்மணிப்ராந்தி முபாநயந்தம்।
ஸ்வரோ சிஷோல்லாஸித கேசபாசம்
மஹேசி சூடாமணி மர்பயாமி॥

ஹே மஹேச்வரி! உனது தொங்கும் பின்னலாகிய நாகத்தின் தலையிலுள்ள மணிதானோ வென்ற மயக்கத்தையுண்டாக்கும்படி சூடாமணியை அணிவிக்கிறேன். அது, தனது காந்தியால் தலை வகிடை ஒளிரச் செய்கிறது.

(42)

त्वामाश्रयद्भिः कबरीतमिस्रै –
र्बन्दीकृतं द्रागिव भानुबिम्बम् ।
मृडानि चूडामणिमादधानं
वन्दामहे तावकमुत्तमाङ्गम् ॥

த்வாமாச்ரயத்பி: கபரீதமிஸ்ரை:
பந்தீக்ருதம் த்ராகிவ பானுபிம்பம்।

ம்ருடானி சூடாமணி மாததாநம்
வந்தாமஹே தாவகமுத்தமாங்கம் ॥

ஹேம்ருடானி! உன்னை ஆச்ரயித்திருக்கிற கேசமாகிய இருட்டினால் சட்டெனப்பிடிக்குள் வைக்கப்பட்ட சூர்ய பிம்பம் போல் சூடாமணியைத்தாங்கி நிற்கும் தலையை வணங்குகிறோம்.

(43)

स्वमध्यनद्धहाटकस्फुरन्मणिप्रभाकुलं
विलम्बिमौक्तिकच्छटाविराजितं समन्ततः ।
निबद्धलक्षचक्षुषा भवेन भूरि भावितं
समर्पयामि भास्वरं भवानि फालभूषणम् ॥

ஸ்வமத்யநத்த ஹாடகஸ்புரன்மணிப்ரபாகுலம்
விலம்பிமௌக்திகச் சடாவிராஜிதம் ஸமந்தத:।
நிபத்தலக்ஷசக்ஷுஷா பவேந பூரி பாவிதம்
ஸமர்பயாமி பாஸ்வரம் பவாநி பாலபூஷணம்॥

ஹே பவாநி! உனக்கு நெற்றியில் அணியும் ஆபரணத்தை அணிவிக்கிறேன். அது, தன் நடுவில் தங்கத்துடன் பதித்த மணியின் ஒளி வீச, தொங்கும் முத்துக்கோர்வையும் விளங்க, பரமேச்வரனால் நெற்றிக்கண்கொட்டாமல் கண்டு அனுபவிக்கப்பட்டதன்றோ!

(44)

मीनाम्भोरुहखञ्जरीटसुषमाविस्तारविस्मारके
कुर्वाणे किल कामवैरिमनसः कन्दर्पबाणप्रभाम् ।
माध्वीपानमदारुणेऽतिचपले दीर्घे दृगम्भोरुहे
देवि स्वर्णशलाकयोर्जितमिदं दिव्याञ्जनं दीयताम् ॥

மீநாம்போருஹகஞ்ஜரீட ஸுஷமாவிஸ்தாரவிஸ்மாபகே
குர்வாணே கில காமவைரிமனஸ: கந்தர்ப
பாணப்ரபாம்।
மாத்வீபானமதாருணே ऽதிசபலே தீர்கே
த்ருகம்போருஹே
தேவி ஸ்வர்ணசலாகயா ஊர்ஜிதமிதம்
திவ்யாஞ்ஜனம் தீயதாம்॥

ஹே தேவி! மதுபானம் செய்து மதமேறிச்சிவந்த நீண்ட உனது கண்களில் தங்கக்குச்சியால் சிறிய திவ்யாஞ்ஜனம் தீட்டலாமே. அந்த கண்கள், குருகுருப்பானவை, மீனா, தாமரை யிதழா அல்லது கஞ்ஜரீடமாவென நினைக்கத்தோன்றும் அழகை யுடையவை; மன்மதனை வெறுத்த பரமேச்வரனுக்கே மன்மத பாணத்தின் சக்தியை காணவைப்பவையும் கூட.

(45)

मध्यस्थारुणरत्नकान्तिरुचिरां मुक्तामुखोद्भासितां
दैवाद्भार्गवजीवमध्यगरवेर्लक्ष्मीमधः कुर्वतीम् ।
उत्सिक्ताधरबिम्बकान्तिविसरैर्भौमीभवन्मौक्तिकां
मद्दत्तामुररीकुरुष्व गिरिजे नासाविभूषामिमाम् ॥

மத்யஸ் தாருண காந்திருசிராம் முக்தாமுகோத்பாஸிதாம்
தைவாத் பார்கவ ஜீவமத்யகரவேர்லக்ஷ்மீமத:
குர்வதீம்।
உத்ஸிக்தாதரபிம்பகாந்தி விஸரைர்பௌமீ பவன்
மௌக்திகாம்
மத்தத்தா முரரீகுருஷ்வ கிரிஜே நாஸா
விபூஷாமிமாம்॥

ஹே கிரிஜே! நான் ஸமர்பிக்கும் இந்த மூக்குத்தியை ஏற்பாயாக! அது முகப்பில் முத்து பதிக்கப்பட்டு, நடுவில் சிவப்பு ஒளியுடன் மிளிர்கிறது. தற்செயலாக, சுக்ரனுக்கும் புஷ்யத்திற்கும் நடுவில் பிரகாசிக்கும் சூர்யன் போல அது பிரகாசிக்கிறது. மேலும், கோவைப்பழம் போன்ற உதட்டின் ஒளி பரக்கப்படு வதால், அதன் நிறமேற்ற முத்துக்களைக் கொண்டதாயுமிருக்கிறது.

(46)

उडुकृतपरिवेषस्पर्धया शीतभानो
रिव विरचितदेहद्वन्द्वमादित्यबिम्बम् ।
अरुणमणिसमुद्यत्प्रान्तविभ्राजिमुक्तं
श्रवसि परिनिधेहि स्वर्णताटङ्कयुग्मम् ॥

உடுக்ருத பரிவேஷ ஸ்பர்தயா சீதபாநோ:
இவ விரசித தேஹத்வந்த்வ மாதித்ய பிம்பம்।
அருண மணி ஸமுத்யத்ப்ராந்த விப்ராஜி முக்தம்
ச்ரவஸி பரிநிதேஹிஸ்வர்ண தாடங்க யுக்மம்॥

ஹே தேவி! சிவந்த மணியும், சுற்றிலும் முத்துமாக அமைந்த இரண்டு கம்மல்களை அணிந்து கொள்ளலாமே. அவை சந்திரனுக்கு, நக்ஷத்ரங்கள் சுற்றிலுமிருப்பதைக் கண்டு பொறாமையால் போல் சூர்யன் தன் தேஹத்தை இரட்டிப்பாகச் செய்து கொண்டுள்ளானோ எனத் தோற்றமளிக்கும்.

(47)

मरकतवरपद्मरागहीरो –
त्थितगुलिकात्रितयावनद्धमध्यम् ।
विततविमलमौक्तिकं च
कण्ठाभरणमिदं गिरिजे समर्पयामि ॥

மரகத வரபத்மராக ஹீரோத்திதகுளிகாத்ரிதயாவநத்த மத்யம்।
விதத விமல மௌக்திகம்ச கண்டாபரணமிதம் கிரிஜே ஸமர்பயாமி॥

ஹேகிரிஜே! உனக்கு இதோ கழுத்தில் அணியும் ஆபரணம் ஸமர்பிக்கிறேன். அதில், மரகதம், பத்மராகம், ஹீரம் இவற்றின் மூன்று மூன்று மணிகளாக நடுவில் அமைக்கப்பட்டிருக்கும். தனியாக, நீண்ட முத்து மணிமாலையும் ஸமர்பிக்கிறேன்.

(48)

नानादेशसमुत्थितैर्मणिगणप्रोद्यत्प्रभामण्डल –
व्याप्तैराभरणैर्विराजितगलां मुक्ताच्छटालंकृताम् ।
मध्यस्थारुणरत्नकान्तिरुचिरां प्रान्तस्थमुक्ताफल –
व्रातामम्ब चतुष्किकां परशिवे वक्षःस्थले स्थापय ॥

நாநாதேசஸமுத்திதைர்மணிகண ப்ரோத்யத் ப்ரபாமண்டல
வ்யாப்தை ராபரணைர்விராஜித கலாம் முக்தாச்சடாலங்க்ருதாம்।

மத்யஸ்தாருண ரத்னகாந்திருசிராம் ப்ராந்தஸ்த
முக்தாபல
வ்ராதாமம்ப சதுஷ்கிகாம் பரசிவே வக்ஷஸ்தலே
ஸ்தாபய।

ஹேபரசிவே! உனது மார்பில் இந்த நான்கு வடமாலையை அணியலாமே. இந்த மாலை பலநாட்டு மணிகள் அடங்கிய அணிகலன்களுடன் முத்துத் தொங்கலும், நடுவில் சிவப்பு மணியின் காந்திபரவ சுற்றிலும் முத்து வரிசையும் கூடியது.

(49)

अन्योन्यं प्लावयन्ती सततपरिचलत्कान्तिकल्लोलजालैः
कुर्वाणा मज्जदन्तःकरणविमलतां शोभितेव त्रिवेणी ।
मुक्ताभिः पद्मरागैर्मरकतमणिभिर्निर्मिता दीप्यमानै-
र्नित्यं हारत्रयी ते परशिवरसिके चेतसि द्योततां नः ॥

அன்யோன்யம் ப்லாவயந்தீஸததபரிசலத்
காந்திகல்லோல ஜாலை:
குர்வாணா மஜ்ஜதந்த: கரணவிமலதாம்
சோபிதேவத்ரி வேணீ।
முக்தாபி: பத்மராகை: மரகதமணிபி: நிர்மிதா
தீப்யமாநை:
நித்யம் ஹாரத்ரயீ தே பரசிவ ரஸிகே
சேதஸி த்யோததாம் ந:॥

ஹே பரசிவரஸிகேதேவி! உனது மூன்று ஹாரங்கள் எங்கள் மனதில் பிரகாசிக்கட்டும். அம்மூன்று ஹாரங்களும் முத்துக்களாலும், பத்மராகங்களாலும், மரகதமணிகளாலும் செய்யப்பட்டவை. அசைந்தாடும் பொழுது காந்தியலைகளால் ஒன்றுக்கொன்று மோதிக் கொள்வன எனினும் மூழ்குபவரின் மனதை தூய்மையாக்கும் த்ரிவேணிபோல் இருப்பவையன்றோ!

(50)

करसरसिजनाले विस्फुरत्कान्तिजाले
विलसदमलशोभे चन्द्रदीशाक्षिलोभे ।

विविधमणिमयूखोद्भासितं देवि दुर्गे
कनककटकयुग्मं बाहुयुग्मे निधेहि ॥

கரஸரஸிஜநாலே விஸ்புரத்காந்தி ஜாலே
விலஸதமலசோபே சஞ்சதீசாக்ஷிலோபே।
விவிதமணி மயூகோத்பாஸிதம் தேவி துர்கே
கநக கடகயுக்தம் பாகுயுக்மே நிதேஹி॥

ஹேதேவி துர்கே! நீ கையாகிய தாமரைத்தண்டை யுடையவள். உனது அழகு எங்கும் பரவி, பரமசிவன் கண்களுக்கும் இன்னும் பார்க்கவேண்டும், பார்க்க வேண்டும் என்ற அவாவை தூண்டும். பற்பல மணிகள் பதித்த இரண்டு கடகங்களை இரண்டு கையிலும் போட்டுக் கொள்ளேன்!

(51)

व्यालम्बमानसितपट्टकगुच्छशोभि
स्फूर्जन्मणीघटितहारविरोचमानम् ।
मातर्महेशमहिले तव बाहुमूले
केयूरकद्वयमिदं विनिवेशयामि ॥

வ்யாலம்பமாந ஸித பட்டகுச்சசோபி
ஸ்பூர்ஜன் மணீ கடித ஹாரவிரோச மாநம்।
மாதர்மஹேச மஹிலே தவபாஹுமூலே
கேயூரகத்வயமிதம் விநிவேசயாமி॥

ஹேதாயே! மஹேசரின் ப்ரியையே! உனது கையின் அடி பாகத்தில் இந்த இரண்டு தோள்வளைகளை பொருத்தியமைக்கிறேன். இவை தொங்கும் பட்டுநூல் குஞ்சத்துடனும், பளபளக்கும் மணிகள் கோர்த்த மாலையினாலும் அழகாக உள்ளது.

(52)

विततनिजमयूखैर्निर्मितामिन्द्रनीलै-
र्विजितकमलनालालीनमत्तालिमालाम् ।
मणिगणखचिताभ्यां कङ्कणाभ्यामुपेतां
कलय वलयराजीं हस्तमूले महेशि ॥

விததநிஜமயூகைர் நிர்மிதாம் இந்த்ரநீலை:
விஜிதகமல நாளாலீந மத்தாலி மாலாம்।
மணிகண கசிதாப்யாம் கங்கணாப்யாமுபேதாம்
கலய வலயராஜீம் ஹஸ்தமூலேமஹேசி॥

ஹேமகேசி! ஒளிவீசும் இந்த்ரநீலக்கற்களால் தயாரிக்கப்பட்டவையும், ஒலிந்துள்ள மதமேறிய தேனீக்களைக் கொண்ட தாமரைத்தண்டையொத்தவையும், மணிகள் பதித்த கங்கணங்களையும் உள்ளடக்கியதுமான வளையல்களையும் அணிந்து கொள்ளலாமே!

(53)

नीलपट्टमृदुगुच्छशोभिता -
बद्धनैकमणिजालमञ्जुलाम् ।
अर्पयामि वलयात्पुरःसरे
विस्फुरत्कनकतैतृपालिकाम् ॥

நீலபட்ட ம்ருதுகுச்சசோபிதா-
பத்தநைக மணிஜால மஞ்ஜுலாம்।
அர்பயாமி வலயாத்புர: ஸரே
விஸ்புரத் கநக தைத்ரு பாலிகாம்॥

நீலப்பட்டுநூல் குஞ்சங்களும், பலமணிகளும் சேர்ந்து அமைந்ததால் அழகான இந்த தங்க முழங்கை கவசத்தை ஸமர்பிக்கிறேன்.

(54)

आलवालमिव पुष्पधन्वना
बालविद्रुमलतासु निर्मितम् ।
अङ्गुलीषु विनिधीयतां शनै -
रङ्गुलीयकमिदं मदर्पितम् ॥

ஆலவாலமிவ புஷ்பதன்வநா
பாலவித்ருமலதாஸு நிர்மிதம்।
அங்குலீஷு விநிதீயதாம்சநை:
அங்குலீயகமிதம் மதர்பிதம்॥

ஹேதேவி! இளம் பவழக்கொடிகளுக்கு மன்மதன் அமைத்த பாத்திபோலிருக்கும் இந்த மோதிரத்தை (நான் ஸமர்பித்த) அணியலாமே!

(55)

विजितहरमनोभूमत्तमातङ्गकुम्भ -
स्थलविलुलितकूजत्किङ्किणीजालतुल्याम् ।
अविरतकलनादेरीशचेतो हरन्तीं
विविधमणिनिबद्धां मेखलामर्पयामि ॥

விஜிதஹரமநோபூ மத்த மாதங்ககும்ப-
ஸ்தல விலுலித கூஜத்கிங்கிணீஜாலதுல்யாம்।
அவிரதகலநாதை ரீசசேதோ ஹரந்தீம்
விவதமணிநிபத்தாம் மேகலாமர்பயாமி॥

ஹேதேவி! பரமசிவனை ஜயித்த மன்மதனாகிய மதங்கொண்ட யானையின் மஸ்தகத்தில் சிதறிக் கொஞ்சும் கிங்கிணி மாலையோவென மயக்கமுறச் செய்வதும், இடைவிடாது இனிய ஒலியால் பரமேச்வரனின் மனதை ஈர்ப்பதும், பலமணிகள் கோர்த்து அமைத்ததுமாகிய மேகலையை ஸமர்ப்பிக்கிறேன்.

(56)

व्यालम्बमानवरमौक्तिकगुच्छशोभि
विभ्राजिहाटकपुटद्वयरोचमानम् ।
हेम्ना विनिर्मितमनेकमणिप्रबन्धं
नीवीनिबन्धनगुणं विनिवेदयामि ॥

வ்யாலம்பமாநவரமௌக்திககுச்சசோபி
விப்ராஜிஹாடகபுடத்வயரோசமாநம்।
ஹேம்நா விநிர்மிதமநேக மணிப்ரபந்தம்
நீவீநிபந்தநகுணம் விநிவேதயாமி॥

ஹே தேவி! தொங்கும் முத்துக்குஞ்சத்துடன் அழகிய இரண்டு தங்க முனைப்புகளுடன் கூடிய பல மணிகளிழைத்த வஸ்திர முடிச்சுப் பட்டையை ஸமர்ப்பிக்கிறேன்.

(57)

विनिहितनवलाक्षापङ्कबालातपौघे
मरकतमणिराजीमञ्जुमञ्जीरघोषे ।
अरुणमणिसमुद्यत्कान्तिधाराविचित्र-
स्तव चरणसरोजे हंसकः प्रीतिमेतु ॥

விநிஹித நவலாக்ஷாபங்க பாலாதபௌகே
மரகத மணிராஜீ மஞ்ஜுமஞ்ஜீரகோஷே!
அருண மணிஸமுத்யத் காந்திதாரா விசித்ர:
தவ சரணஸரோஜே ஹம்ஸக: ப்ரீதிமேது॥

ஹேதேவி! புத்தம் புதிய லாக்ஷாரஸத்தையும், இளம் வெயிலையும் ஒத்திருப்பதும், மரகத மணிக்கொத்துக்களால் அழகிய சதங்கையொலியை உடையதுமான உனது திருவடித் தாமரையில் சிவப்பு மணிகளின் ஒளிவீச்சால் அழகான ஹம்ஸகம் உகப்படையட்டுமே!

(58)

निबद्धशितिपट्टकप्रवरगुच्छसंशोभितां
कलक्वणितमञ्जुलां गिरिशचित्तसंमोहिनीम् ।
अमन्दमणिमण्डलीविमलकान्तिकिम्मीरितां
निधेहि पदपङ्कजे कनकघुङ्घुरूमम्बिके ॥

நிபத்த சிதிபட்டகப்ரவரகுச்ச ஸம்சோபிதாம்
கலக்வணித மஞ்ஜுலாம் கிரிசசித்தஸம்மோஹிநீம்।
அமந்த மணிமண்டலீ விமலகாந்தி கிம்மீரிதாம்
நிதேஹி பதபங்கஜே கநககுங்குருமம்பிகே॥

ஹே அம்பிகே! கரும்பட்டு நூல் குஞ்சம் கட்டி, இனிய ஒலி எழுப்பும் பொழுது பரமன் மனதை கொள்ளை கொள்ளும் தங்க குங்குருவை காலில் போட்டுக்கொள். அதில் பதித்த மணிகளின் தெளிவான ஒளி பளபளக்கிறதே.

(59)

विस्फुरत्सहजरागरञ्जिते
शिञ्जितेन कलितां सखीजनैः ।
पद्मरागमणिनूपुरद्वयी-
मर्पयामि तव पादपङ्कजे ॥

விஸ்புரத்ஸஹஜ ராக ரஞ்ஜிதே
சிஞ்ஜிதேந கலிதாம் ஸகீஜநை:।
பத்மராக மணிநூபுரத்வயீம்
அர்பயாமி தவ பாத பங்கஜே॥

*ஹேதேவி! இயற்கையாகவே செந்நிறமான உனது திருவடித்தாமரையில் தோழிகள் ஒலியுடன் கூடியமைந்த பத்மராக மணிச்சதங்கையை அர்பணிக்கிறேன்.*

(60)

पदाम्बुजमुपासितुं परिगतेन शीतांशुना
कृतां तनुपरम्परामिव दिनान्तरागारुणाम् ।
महेशि नवयावकद्रवभरेण शोणीकृतां
नमामि नखमण्डलीं चरणपङ्कजस्थां तव ॥

பதாம்புஜமுபாஸிதும் பரிகதேந சீதாம்சுநா
க்ருதாம் தனுபரம்பராமிவ திநாந்தராகாருணாம்।
மஹேசி நவயாவகத்ரவபரேண சோணீக்ருதாம்
நமாமி நக மண்டலீம் சரணபங்கஜஸ்தாம் தவ॥

*ஹேமஹேசி! உனது திருவடித்தாமரையிலுள்ள நக வரிசையை வணங்குகிறேன். அந்த நகவரிசை, உனது திருவடி ஸேவைக்காக வந்த சந்திரன் தனது வடிவை பன்மடங்காக்கி மாலை நேரமாதலால் செம்மேனியுடன் விளங்குகிறானோ எனத் தோன்றும்படி இருக்கும். உண்மையில் புதுயாவகரஸம் பூசப் பட்டு சிவந்திருப்பவையே அவை.*

(61)

आरक्तश्वेतपीतस्फुरदुरुकुसुमैश्चित्रितां पट्टसूत्रै –
देवस्त्रीभिः प्रयत्नादगरुसमुदितैर्धूपितां दिव्यधूपैः ।
उद्यद्गन्धान्धपुष्पंधयनिवहसमारब्धझङ्कारगीतां
चञ्चत्कल्हारमालां परशिवरसिके कण्ठपीठेऽर्पयामि ॥

ஆரக்தச்வேத பீதஸ்புரதுருகுஸுமைஸ்சித்ரிதாம் பட்ட
ஸூத்ரை:
தேவஸ்த்ரீபி: ப்ரயத்னாத கருஸமு திதைர்தூபிதாம்
தூபகந்தை:।
உத்யத்கந்தாந்தபுஷ்பந்தயநிவஹஸமாரப்த ஜங்கார
கீதாம்
சஞ்சத்கல்ஹாரமாலாம் பரசிவரஸிகே
கண்டபீடேऽர்பயாமி॥

ஹே பரமசிவனின் கண்மணியே! உனது கண்டத்தில் தளதள வென்றிருக்கும் தாமரை மலர்மாலையை ஸமர்ப்பிக்கிறேன். அம்மாலை, சிவப்பு, வெள்ளை, மஞ்சள் ஆகிய நிறமுள்ள பெருபுஷ்பங்களாலும் பட்டுக்குஞ்சங்களாலும் அமைக்கப்பட்டது. தேவஸ்திரீகள் முயன்று அகருப்புகையேற்றியது. வாசனை மயக்கத்தால் தேனீக்கள் ஜங்காரம் செய்ய ஹேதுவானது.

(62)

गृहाण परमामृतं कनकपात्रसंस्थापितं
समर्पय मुखाम्बुजे विमलवीटिकामम्बिके ।
विलोकय मुखाम्बुजं मुकुरमण्डले निर्मले
निधेहि मणिपादुकोपरि पदाम्बुजं सुन्दरि ॥

க்ருஹாண பரமாம்ருதம் கநக பாத்ரஸம்ஸ்தாபிதம்
ஸமர்பயமுகாம்புஜே விமலவீடிகாமம்பிகே।
விலோகய முகாம்புஜம் முகுரமண்டலே நிர்மலே
நிதேஹி மணிபாதுகோபரிபதாம்புஜம் ஸுந்தரி॥

ஹே ஸுந்தரி! தங்கத்தட்டில் பரிமாறிய அம்ருதத்தை ஆஸ்வதிக்கலாமே, வாயில் தூயதாம்பூலத்தைச் சுவைக்கலாமே. கண்ணாடியில் முகத்தைக் காணலாமே. திருவடித்தாமரையை மணிபாதுகையில் வைத்துக் கொள்ளலாமே!

(63)

आलम्ब्य स्वसखीं करेण शनकैः सिंहासनादुत्थिता
कूजन्मन्दमरालमञ्जुलगतिप्रोल्लासिभूषाम्बरा ।
आनन्दप्रतिपादकैरुपनिषद्वाक्यैः स्तुता वेधसा
मच्चित्ते स्थिरतामुपैतु गिरिजा यान्ती सभामण्डपम् ॥

ஆலம்ப்யஸ்வஸகீம் கரேணசநகை:
ஸிம்ஹாஸநாத்உத்திதா
கூஜன்மந்தமராள மஞ்ஜுல கதிப்ரோல்
லாஸிபூஷாம் பரா
ஆனந்த ப்ரதிபாதகை ருபநிஷத்வாக்யை:
ஸ்துதாவேதஸா
மச்சித்தே ஸ்திரதாமுபைது கிரிஜா யாந்தீ
ஸபாமண்டபம்॥

ஸ்ரீபார்வதிதேவி, தனது தோழியை பிடித்துக்கொண்டு ஸிம்மாஸனத்திலிருந்து மெல்ல எழுந்து, கூவும் அன்னம் போல் நடந்து வருகையில் பளபளக்கும் பட்டாடை உடுத்தியவளாய், பிரம்மதேவன் ஸ்துதி பாட, ஸபாமண்டபம் போய்க்கொண்டிருக்குமவள் என்மனதில் பதியட்டும்.

(64)

चलन्त्यामम्बायां प्रचलति समस्ते परिजने
सवेगं संयाते कनकलतिकालङ्कृतिभरे ।
समन्तादुत्तालस्फुरितपदसंपातजनितै-
र्झणत्कारैस्तारैर्झणझणितमासीन्मणिगृहम् ॥

